# ஆடு! - சிங்கம்!

இது மிகவும் பழமையான கதை. இருப்பினும் உண்மையை நாடி, உயர் பரிமாணத்தை நோக்கி, பயணித்துக் கொண்டிருக்கும் பலருக்கும் பயன்படுவதற்காக இங்கு கூறப்படுகிறது.

ஒரு கர்ப்பமான பெண் சிங்கம் மலையின் மீதுள்ள ஒரு பாறையிலிருந்து, மற்றொரு பாறைக்கு தாவுகையில், அதன் குட்டி பிறந்து கீழே உள்ள பள்ளத்தாக்கில் மேய்ந்துக் கொண்டிருந்த கணக்கிலடங்கா ஆடுகள் மேய்ந்துக் கொண்டிருந்த, ஆட்டு மந்தையில் போய் விழுந்தது. அவ்வாறு வந்து விழுந்த சிங்கக்குட்டியை, ஆட்டு மந்தைகளில் உள்ள ஆடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து, வந்தாரை வாழ வைக்கும் சமூகம் அவர்களுக்கு என்ன சொல்லி வளர்த்தார்களோ, அதேப்போன்று இந்த சிங்கக்குட்டிக்கும் போதித்து, சிறப்புற வளர்த்து வந்தன.

சிங்கக்குட்டியும் தன் உண்மை நிலை தெரியாமல், கூட்டத்தோடு கூட்டமாக மற்ற ஆடுகளைப்போன்று வளர்ந்து வந்தது, அத்துடன் அந்த ஆடுகளைப் போன்றே புல்லை தின்று, அவைகளைப் போன்றே பரிதாபமாக கத்தியது. மேலும், அந்த ஆடுகளைப் போன்றே எடுத்ததற்கெல்லாம் பயந்து நடுங்கியது. அந்த ஆட்டுக்கூட்டத்தை விட்டு ஒரு கணமும் பிரியாமல் கூட்டத்தோடு கூட்டமாக வளர்ந்து வந்தது.

ஒருநாள் மற்றொரு மூத்த சிங்கம் பசியினால், இந்த ஆட்டு மந்தையைத் தாக்கியது. அந்த தாக்குதலின் விளைவாக பயந்து, இங்குமங்கும் சிதறி ஓடும் ஆடுகளின் கூட்டத்தின் மத்தியில், அந்த ஆடுகளுடன் ஆடாக வளர்ந்துவிட்ட தன் இனமான ஒரு சிங்கத்தை கண்டது. அதிலே, அந்த இளம் சிங்கமும் பயந்தபடி ஆடுகளைப்போன்றே கத்திக்கொண்டு ஓடுவதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தது.

இதைக்கண்ட அந்த மூத்த சிங்கம் அந்த ஆடுகளையும், தன் பசியையும் மறந்து, அந்த இளம் சிங்கத்தை துரத்திப் பிடித்தது. இளம் சிங்கமும் தன்னை விட்டுவிடும்படி அந்த ஆடுகளைப் போன்றே பயந்து நடுங்கிக் கொண்டு கதறியது. மற்ற ஆடுகளைப் போன்றே தன்னையும் போக விடும்படி கெஞ்சியது, அழுதது.

மூத்த சிங்கமும் இந்த இளம் சிங்கத்திடம் பேசி புரிய வைக்க முடியாது என முடிவு செய்து, அருகே உள்ள ஒரு நீர் நிலைக்கு அதை இழுத்துச் சென்று, அந்த நீரில் தன் முகத்தையும், அந்த இளஞ்சிங்கத்தின் முகத்தையும் காண்பித்து **"பார்"** நீயும், நானும் ஒன்றே, என்னைப் போலவே நீயும் சிங்கம்தான். "**நீ ஆடு அல்ல!**" என்று அதன் உண்மை சொரூபத்தைக் காட்டிக் கொடுத்தது.

இதைக்கண்ட இளம் சிங்கம் உடனடியாக விழித்துக் கொண்டது. தன் உண்மை சொரூபத்தை அறிந்தவுடன், அந்த இளம் சிங்கத்திடமிருந்து தன்னை அறியாமலேயே "**கர்ஜனை**" கிளம்பியது. இத்தனை ஆண்டுகளாக அறியாமையில் அடக்கப்பட்டிருந்ததால், அந்த கர்ஜனை சுற்றுப்புறமெல்லாம் நடுங்கும் அளவிற்கு பயங்கரமாக ஒலித்தது. அத்துடன் மூத்த சிங்கத்திற்கு நன்றி கூறி, இளம் சிங்கம் வெற்றி நடைப்போட்டது!



இதுபோன்று, உண்மையான சத்குருவானவர், இந்த ஆட்டு மந்தைகள் போன்ற அற்ப மனிதர்களின் கூட்டத்தில் இருந்துக்கொண்டு, சுய அறிவின்றி, அறியாமையினால் அனைத்தையும் செய்துக்கொண்டிருக்கின்ற நம்மை, அறியாமை சமூகத்திடமிருந்து பிரித்தெடுத்து, நம்முடைய உண்மை சொருபத்தை (அறிவை) நமக்குக் காட்டிக் கொடுக்கிறார்.

ஆனால், நாமோ, ஆரம்பத்தில் அவர் சொல்வதை ஏற்க மாட்டோம், அத்துடன் அவருடன் செல்லவும் மறுப்போம். காரணம், கால, காலமாக ஆட்டுமந்தைகள் போன்று, அறியாமையுடன் காணப்படுகின்ற அற்ப மனிதர்களின் மத்தியில் வளர்ந்து வந்துள்ளதால், அவர்கள் மீதுள்ள மோகத்தால், பாசத்தை விலக்க முடியாமல் தவிப்போம், கெஞ்சுவோம், விட்டுவிடும்படி கதறுவோம்... அழுவோம்.

நான் ஒரு நல்ல குடும்பஸ்தன் என்போம், எங்கள் பாரம்பரியம் மிகவும் பழமையானது என்போம். எங்கள் இனமே எல்லாவற்றையும் விட உயர்ந்தது என்போம், எங்கள் மதமே மகத்தானது என்போம். மக்களின் மொழிகளிலே, எங்கள் மொழியே ஏற்றது என்போம்...! இவர்கள் என் உயிர் என்போம். அவர்களின் அன்பு! என் ஆழமான நேசம்! என்போம்,

ஆனால், சத்குருவோ அவைகள் எல்லாம் சத்தியமில்லை, **“வந்து போகின்ற கனவு”** - என்பார். உடனடியாக **விழித்துக்கொள்!** உன் கனவிலிருந்து!... என்று தட்டி எழுப்பி விடுவார்.

அத்துடன், **நீ ஆடு அல்ல!** இந்த ஆட்டு மந்தைகளில் கலந்து இருப்பதினால்தான், நீயும் ஆடு என்று நினைத்துக் கொள்கிறாய்!... ஆனால், **“நீ ஆடு அல்ல!... சிங்கம்”** என்று எடுத்துக்கூறி, இந்தக் கூட்டத்திலிருந்து விலகு என்பார். இந்த கூட்டத்தில் இருக்கும்வரை உன்னால், இவைகளின் இயல்பான பயம், பரிதவிப்பு, போன்ற அறியாமைகளில் இருந்து விடுபட முடியாமல், அவைகள் கொடுத்த அனேக பயிற்சிகளினால், அனைத்திலும் பற்று கொண்டு, அந்த ஆட்டு மந்தைகளுக்குள்ளேயே, மற்ற ஆடுகளைப்போன்று மயங்கிக் கொண்டிருப்பாய் என்பார்.

இருப்பினும், இது ஆடுகளின் குற்றம் அல்ல!.

அந்த ஆடுகள் சிங்கக்குட்டியை தங்களைப் போன்று "**ஆடு**" ஆக்கவில்லை. அவைகள் கற்றுக்கொண்டதை, அப்படியே அந்த சிங்கத்துக்கு காட்டிக் கொடுத்தன. அதனால், அவைகளைப்போன்று அந்த சிங்கத்தையும் வளர்த்து விட்டன. அந்த சிங்கமும் அறியாமையினாலே, அந்த ஆடுகளைப்போன்று தன் உண்மை பலத்தை உணராமல், பயந்தவாறு வளர்ந்து வந்தது. அந்த சிங்கமும் தன் வாழ்க்கையை அந்த ஆடுகளைப் போன்றே குறுக்கிக் கொண்டது.

**எதுவரையில்!...?**

ஒரு மூத்த சிங்கம் வந்து, தன் உண்மை சொருபத்தைக் காட்டிக் கொடுக்கும் வரையில்...!

அவ்வாறே, சத்குருவும் நம் உண்மை சொருபத்தைக் காட்டிக் கொடுக்கும் வரையில் நாமும் அப்படியே அந்த ஆடு போன்று வாழ்ந்து வந்துள்ளோம்....!

அதாவது, நம் சமூகம், நம்முடைய முன்னோர்கள், பெற்றோர்கள், நம் ஆசிரியர்கள், நம் சொந்த, பந்தங்கள் என எல்லாருமே நம்மை ஆடாக எண்ணி "**நீ நல்ல ஆடாக இருப்பது எப்படி**?" என்றே நமக்கு திறம்பட போதித்து வந்துள்ளார்கள்.

தாங்கள் என்ன கற்றுக் கொண்டார்களோ, அதை அப்படியே நமக்கும் கற்றுக் கொடுத்தார்கள். காரணம், அவர்கள் கற்றுக்கொண்டதைத்தான் நமக்கும் அவர்களால் கடைசி வரையில் கற்றுக்கொடுக்க முடியும்.

**நீ ஆடு அல்ல! சிங்கம்தான்!** என்று ஒரு நாளும் போதிக்க முடியாமல் போனதற்குக் காரணம், அவர்களும் அந்த ஆட்டு மந்தையுடன் ஆடாக மாறி, அப்படியே வளர்ந்து வந்ததால், தங்களைப் போன்றே நம்மையும் ஆடாக மாற்றி விட்டார்கள்.

இவர்களிலே, எவரொருவர் தன்னை **சிங்கம்** என்று உணர்ந்துக் கொண்டாரோ, அவரே "**நீ ஆடு அல்ல**!... **சிங்கம்**" என்று எடுத்துக்கூறி, நம் உண்மை சொருபத்தைக் காட்டிக் கொடுக்க முடியும்.

அவரே, நம்மை இந்தக் கனவில் இருந்து, விழிக்க வைக்கவும் முடியும். சொல்லப்போனால், இங்கு ஆடுகளே இல்லை!... இருப்பது சிங்கம் மட்டும்தான். ஆகவே, நாம் கண்களை திறந்துக்கொண்டு தூங்கிக் கொண்டிருக்குவரை, அந்த அற்ப ஆடாகவே இருக்கும் அறியாமை சிங்கங்களே!

அதனால், நாம் இந்த உண்மையை உணராமல், ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களால், நம்மை முக்தனாக அறிவதற்கு பதிலாக, அவசியமற்ற அனேக பயிற்சிகளை பயின்றுக்கொண்டு, பலவழிகளிலும் பயணித்துக் கொண்டுள்ளோம்.

உண்மையில், நாம் இங்கு விழித்துக்கொள்ள வேண்டுமே தவிர, வீணான கனவுகளை நிஜம்! என நம்பிக்கொண்டிருக்கும்வரை நம்மை நாம் அறிய முடியாது!...

கதையில் வரும் இளம் சிங்கம், மூத்த சிங்கத்தைக் கண்டவுடன் "**நான் உன்னைப் போன்று சிங்கமாக ஆவதற்கு ஏதாவது வழி இருக்கிறதா**!...? என்று கேட்டால், அதற்கு அந்த மூத்த சிங்கமும் வேடிக்கையாக நீ யோகா பழக வேண்டும், தலைகீழாக நிற்க வேண்டும், நாள்தோறும் பூசைகள் செய்ய வேண்டும், அத்துடன் அனுதினமும் மூச்சு பயிற்சிகளை விடாமல் மேற்கொள்ள வேண்டும், உண்ணா நோன்பு கடைப்பிடிக்க வேண்டும், புண்ணியக் காரியங்கள் செய்ய வேண்டும், அத்துடன், அனைத்தையும் துறந்த துறவியாக வேண்டும்.... முக்கியமாக முடிந்த போதெல்லாம், "**நான் சிங்கம்**", "**நான் சிங்கம்**" என்று ஓயாமல் ஜெபம் செய்துக் கொண்டே இருக்க வேண்டும் என்றெல்லாம் கூறுவதாக வைத்துக்கொள்வோம். அந்த இளம் சிங்கமும் இவைகளையெல்லாம் உண்மையெனக் கடைபிடித்துக் கொண்டிருந்தால், அவைகள் எல்லாம் வீண் முயற்சியாகிவிடும்.

ஏனெனில்**, அந்த இளம் சிங்கம் ஏற்கனவே சிங்கம்தான்.**

ஆகவே, தன்னை அறிய வேண்டுமானால், இங்கு விழிப்புதான் வேண்டுமே தவிர....! வீணான பயிற்சிகள் எதுவும் வேண்டியதில்லை!.



ஆகவே, "**நீ சிங்கம்**" என்றதுமே, அந்த இளம் சிங்கம் தனது நிஜத்தை, தன் உண்மை சொருபத்தை உடனடியாக உணர்ந்துக் கொண்டு, அக்கணமே, கர்ஜனை செய்தது போன்று, நமக்கும் நம் சத்குருவானவர், "**நீ இந்த உடலல்ல!, உருவமில்லாத, பெயரில்லாத, அகண்டமான நித்தியம்**". அத்துடன், நீ பிறக்கவே இல்லை!... ஆகவே, நீ இறக்க வாய்ப்பே இல்லை!...

நீ! என்றென்றும் உள்ள எல்லையில்லாத, எங்கும் இருக்கும் உன்னத இருப்பு!.

நீ! வருவதும் இல்லை!... போவதும் இல்லை!... நீ! எப்பொழுதும் இருக்கிறாய்!. அதுவும், **அதுவாகவே இருக்கிறாய்!** என்று கூறியதும், உடனடியாக உண்மையை அறிந்துக் கொண்டால், பாக்கியசாலி.

அதை விடுத்து, அற்ப பயிற்சிகளைப் பற்றிக்கொண்டு, அந்த பயிற்சியின் வாயிலாக பலவற்றையும் பிடித்துக்கொண்டு, அதன் பலன்களுக்காகப் பற்று வைத்துக் கொண்டு, தனக்கு வேறாக மற்றொன்று ஆகவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கும் வரை,

**அதுவாக தன்னை உணர முடியாமல்**, அற்ப ஆசைகளினால் '**அறிவு**' தடுக்கப்பட்டு, உண்மையை அறிய முடியாமல் போய்விடுகிறது.

அந்த மூத்த சிங்கத்துடன் சென்று, நீரில் தன் உண்மை சொரூபத்தைக் கண்டு உடனடியாக தன்னை உணர்ந்துக்கொண்ட, அந்த உத்தம சிங்கத்திற்கு, **நான் இப்படி ஆக வேண்டும்!, அப்படி ஆக வேண்டும்!** என்ற ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்கள் ஏதுவுமே இல்லை!...

ஆனால், அது அறியாமையினால் மூத்த சிங்கத்தின் பிடியிலிருந்து தப்பியோட மட்டுமே முயன்றது. '**என்னை விட்டுவிடு**!'... என்னை **உன் வழியில் இழுக்காதே!...** எனக்கு பிறந்தது முதலே, என் சுற்றத்தை சூழ்ந்துக்கொண்டு, எல்லாவற்றையும் பிடித்துக்கொண்டு இருக்கவே விருப்பம் உள்ளது. ஆகவே, உன்னுடன் என்னால் வரவே முடியாது என்று கெஞ்சியது.

அத்துடன், நான் ஆடுகளுடன் இருக்கவே ஆசைப்படுகிறேன், என்னை விட்டு விடு!... என்றுதான் கத்தியது, கதறி அழுதது.

ஆனால், விடாப்பிடியாக அந்த மூத்த சிங்கம், அந்த இளம் சிங்கத்தை அழைத்துச் சென்று, அருகே உள்ள நீரில், அதன் உண்மை சொரூபத்தைக் காட்டிக் கொடுத்தவுடன், அந்த இளம் சிங்கம் தண்ணீரில் தன் முகத்தைப் பார்த்த மாத்திரத்தில், அதன் அறியாமை விலகியது. அப்பொழுது, அதன் உண்மை சுபாவம் உடனடியாக வெளிப்பட்டு **கர்ஜனை** பிறந்தது. அந்த கர்ஜனை, அதன் உண்மை இயல்பாக இருந்ததினால், **அதன்பிறகு நடந்தது எதுவும் அதன் வசத்தில் இல்லை!...** அந்த தண்ணீரில் தெரிந்த சத்தியத்திலிருந்து, அது தப்ப முடியாத நிலை உண்டானது. அதனால், அது தன்னை அறியாமலேயே தன் சுபாவமான கர்ஜனையை உடனடியாக எழுப்பியது.

அந்த இளம் சிங்கத்திற்கு "**நான் யார்?**" என்று தெரிந்ததும், "**நான் சிங்கம்**" என்று எப்பொழுதும் கூறிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் உண்டாகவில்லை!... அத்துடன் அதை அனுதினமும் பயிற்சியாக சொல்லிப்பழகிக் கொண்டிருக்க வேண்டிய கட்டாயமும் இல்லை.

அதன் ஒரே பார்வையில், அனைத்து அறியாமையும் விலகியது. அந்த பார்வையில் அதற்கு உடனடியாக **விழிப்பு** வந்தது!. இனி!, அது ஒரு நாளும் ஆடாக மாறாது. அதன் உண்மை இயல்பிலேயே, தன் சொரூபத்திலேயே எப்பொழுதும் இருக்கும்.

[இந்த சிறு கதை ஆட்டுமந்தைகளைப் போன்று, அறியாமையிலுள்ள அனேக மனிதர்களிடமிருந்து விடுபட்டு, விவேகத்துடன் தன் சத்குருவின் சத்திய வார்த்தையை சந்தேகமின்றி ஏற்றுக்கொண்டு, "**நான் சிங்கம்**" **(அதுவே நான்)** என்று உணர்ந்துக்கொள்ள உண்மையாக பயணிக்கும் உத்தம சாதகர்களுக்கு **சமர்பணம்**!.]

நன்றி!

**நிறைவு.**

